27th September 1958]

SRI A. GOVINDASAMY : சர்க்கார் மேஜையின்மீது வைத்திருக்கும் குறிப்பில் பக்கிரிசுவாமி பிள்ளை அவர்கள் குறிப்பிட்ட ஆஸ்பத்திரி இன்னும் திறக்கப்படவில்லை என்று தெரிகிறது. (குறுக்கீடு). அந்த ஆஸ்பத்திரி ராஜ்ய சர்க்காரிடமிருந்து ஏதாவது நிதி கோரியிருக்கிறதா ? ராஜ்ய சர்க்கார் ஏதாவது நிதி கொடுப்பதாக உறுதி அளித்திருக்கிறார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : ராஜ்ய சர்க்கார் நிதி கொடுத்துத் தான் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. 'ரெகரிங் அண்டு நான்-ரெகரிங்' இரண்டிற்கும் நிதி கொடுக்கப்படுகிறது.

SRI K. B. S. MANI : தற்பொழுது இருக்கிற டி.பி. ஸானடோரியங்களில் இடம் இல்லாத காரணத்தினால், நம்முடைய சர்க்காரிடமிருந்து 'ஸ்டேட் எய்டு' ஒவ்வொரு ஆஸ்பத்திரிக்கும் கொடுத்து 'பெட்களை' அதிகப் படுத்துவதற்கு சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் பல ஆஸ்பத்திரிகளில், குறிப்பாக ஜில்லா, தாலூக்கா தலைநகர ஆஸ்பத்திரிகளில் படுக்கைகளை அதிகப்படுத்துவதற்கு திட்டம் இருக்கிறது.

SRI P. G. MANICKAM : மேற்கண்ட ஆஸ்பத்திரிகளில் ஒரு வியாதியஸ்தர் சேரவேண்டுமானால் முதலில் அவருடைய பெயரை ரிஜிஸ்டர் செய்து கொள்ள வேண்டியிருக்கிறது. அப்படி ரிஜிஸ்டர் செய்துகொண்ட பின்பும் கூட ஸீரியல் நம்பர் பிரகாரம் நோயாளிகள் அனுமதிக்கப்படுவதால், அநேக நோயாளிகள் 3 மாதங்கள், 4 மாதங்கள் ஆகியும் கூட அட்மிஷன் கிடைக்காமல் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது. அப்படி ரிஜிஸ்டர் செய்துகொண்ட நோயாளிகளுக்கு இடம் கிடைக்காவிட்டால், அந்த சமயங்களில் அவர்களுக்கு அங்கு இருக்கும் தலைமை ஆஸ்பத்திரி மூலமாக மருந்துகளை சப்ளை செய்து நிவாரணம் அளிப்பதற்கு சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அந்தந்த ஆஸ்பத்திரிகளில் இருக்கும் படுக்கைகளின் எண்ணிக்கைக்கு மேல் நோயாளிகள் இருக்கிறார்கள். ஆகவே, இம்மாதிரி ஒரு ரிஜிஸ்டர் முறையை அனுசரித்தால் தான், கிரமமான முறையில் நோயாளிகளுக்கு இடம் கொடுக்க முடியும். ஒரு நோயாளிக்கு ஒரு ஆஸ்பத்திரியில் இடம் கிடைக்காவிட்டால், மற்றொரு ஆஸ்பத்திரிக்குப் போய் அங்கே அவருடைய அதிருஷ்டத்தை பார்க்கலாம்.

*Gardens and lawns under Lower Bhavani and Amaravathi Projects*

* 561 *Q.*—SRI K. VINAYAKAM : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) what is the estimated cost of laying out and maintaining gardens and other lawns under the Lower Bhavani Project and under the Amaravathi Project;

(*b*) what is the amount sanctioned for these works; and

(*c*) whether the works have been taken up for execution?

THE HON. SRI P. KAKKAN : (*a*) The estimated cost of formation of parks, fountains, etc., is Rs. 1,80,000, in the case of Lower Bhavani Project and Rs. 1,00,000 in the case of Amaravathi Project.

The cost of maintenance of the parks, etc., will be Rs. 10,000 and Rs. 9,000 respectively per annum.

(*b*) Rs. 2,80,000.

(*c*) Preliminaries are being attended to and the work will be taken up for execution as soon as they are completed.

[27th September 1958

SRI K. VINAYAKAM : இந்த பிராஜக்டுகளின் பக்கத்தில் தோட்டங்களும் புல் பயிரிடும் வயல்களும் அத்தியாவசியமானதா ? அப்படி அத்தியாவசியமில்லை என்றால் அந்தப் பணத்தை வேறு ஏதாவது நல்ல வேலைக்கு பயன்படுத்தக் கூடாதா என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : இம்மாதிரி தோட்டங்கள் வைப்பது நல்லது என்றுதான் அரசாங்கம் கருதுகிறது. அப்படியானால் அதற்காக செலவழிப்பதும் நல்லதுதான் என்று அரசாங்கம் கருதுகிறது.

SRI K. R. NALLASIVAM : இவைகளுக்காக எடுத்துக்கொள்ளப் பட்டிருக்கிற நிலத்தினுடைய விஸ்தீரணம் எவ்வளவு ?

THE HON. SRI P. KAKKAN : தனிக் கேள்வி கேட்க வேண்டும்.

SRI N. MAHALINGAM : இந்த பிராஜக்டுகளை பார்ப்பதற்கு பொது மக்கள் ஆயிரக்கணக்கில் குழந்தைகளுடன் வருவது அரசாங்கத்திற்கு தெரியுமா ? ஆகவே, அங்கு குழந்தைகள் விளையாடுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டிய அவசியம் இருக்கிறதா ?

THE HON. SRI P. KAKKAN : அது உண்மைதான். அநேக ஜனங்கள் பார்ப்பதற்காக வந்து போகிறார்கள். அவர்கள் தங்குவதற்கு தோட்டங்கள் போன்ற ஏற்பாடுகள் செய்வது நல்லது. கனம் அங்கத்தினர் சொல்லும் யோஜனை நல்லது என்பதை தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

*Supply of electricity for agricultural purposes*

* 562 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 1956–57, 1957–58-ம் ஆண்டுகளில் விவசாயத்திற்காக மின்சாரம் உபயோகிக்கும் திட்டங்கள் வட ஆற்காடு மாவட்டத்தில் எத்தனை நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டன ?

(ஆ) எத்தனை திட்டங்கள் பற்றாக்குறை திட்டங்கள் (Not remunerative) என்று கைவிடப்பட்டன ?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) Eighty-five schemes were taken up for execution during 1956–57 and 60 during 1957–58.

(*b*) 47.

SRI S. M. ANNAMALAI : விவசாயிகளுக்கு மின்சாரம் தேவை என்றால் பகலில்தான் மின்சாரம் கொடுக்கப்படவேண்டும். ஷிப்டு முறை இருப்பதினாலும், மினிமம் சார்ஜ் அதிகமாக இருப்பதினாலும் கன்ஸ்யூமர்கள் முன்வருவதில்லை. ஆகவே மினிமம் சார்ஜை குறைப்பதற்கும், ஷிப்டு முறையை எடுப்பதற்கும் சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI V. RAMAIAH : கனம் அங்கத்தினர் கன்ஸ்யூமர்கள் முன்வராததற்கு இரண்டு குறைகள் சொன்னார்கள். எந்தக் காலத்திலும் கன்ஸ்யூமர்கள் முன்வராமல் இல்லை. நிறைய தேவை இருக்கிறது. ஒவ்வொரு கிராமத்திலும் போய் மின்சாரம் கொடுப்பதற்கு வேண்டி எல்லா முறைகளையும் பரிசீலனை செய்து பார்த்த பிற்பாடு ஒரு சில கிராமங்களில் கண்டிப்பாக இதை விட்டுவிடவேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது. கன்ஸ்யூமர்கள் ஒத்துழைப்பு குறைவினால் இது ஏற்படவில்லை. பணம் ஓரளவுக்கு வரவேண்டும், 10 சத விகிதம் காரண்டி வரவேண்டும் என்ற முறையில் திட்டம் போடக்கூடிய நேரத்தில் சில கஷ்டங்கள் ஏற்படுகின்றன. மற்றொரு குறை இரவு நேரத்தில் தான் விவசாயிகளுக்கு மின்சாரம் கொடுக்கப்படுவதாகச் சொன்னார்கள். சமீப காலத்தில் நீர்நிலைகளில் தண்ணீர் மட்டம் உயர்ந்திருப்பதால் 'நைட் சப்ளை' மாத்திரம் அல்லாமல் பகல் நேரத்திலும் எல்லா கன்ஸ்யூமர்களுக்கும் மின்சாரம் கொடுப்பதற்கு இப்பொழுது அரசாங்கம் உத்தரவு போட்டிருக்கிறது.